வாழ்க திராவிடம்! வாழ்க தமிழ்!

# சீர்திருத்த பாடல்கள்.



பாடல்கள் இயற்றியவர்





குடந்தை K.M. இராமாமிர்தம்

வெளியிடுவோர்:- S. சொ[illegible]கநாகன்.
45, மூர்த்தி செட்டித்தெரு, குடந்தை [ [illegible]0...1...6.

# சீர்திருத்த பாடல்கள்.

(மகான் காந்தி மகான் என்ற இசை)

1. ஈ. வெ. ராமன் இவர்தான்
   வைக்கம் வீரராமே பூலோகம் மீதிலே (ஈ வெ)
ஈரோடு மீந்தவள்ளல்
   போராடும் நமது அண்ணல்
ஆரிய பான்மை கண்டார் (அதை)
   அழிக்கும் உறுதிகொண்டார்
அறிவெனும் நூலே தந்தார்
   அனைவரும் ஒன்று என்றார் (ஈ வெ)
அறிவான்மையே ஆயுதம்
   கரும் ஆடையே சோபிதம்
என்றும் வாழ்க திராவிடம்
   போராடிடும் புரட்சி கொடி
நீடூழி வாழ்கவே...
   வாழ்க திராவிடம் (ஈ வெ)

(கண்ணெடுத்தாகிலும் காணீரோ என்ற இசை)

ராகம் சிம்மேந்திர மத்திபம்...தாளம் ஆதி.

பல்லவி

2, உன் இனப்போரதில் சேராயோ
உரைக்கும் ஈ. வெ. ரா. சொல் கேளாயோ தோழா (உன்)

அனுபல்லவி

தன்னலமேகருதா தலைவராம் நம் பெரியார்
தள்ளாதவயதினிலே தளரா உழைத்துவரும் (உன்)

சரணம்

பட்டம் பதவிக்குப் போராடவில்லை...
ராம பஜனைசெய்யவுமவர் நாடவில்லை
எட்டா திசைகளெல்லாம் கோரவில்லை
ஏகாதிபத்தியத்தை தேடவில்லை (உன்

(அம்பா அகிலலோக நாயகி என்ற இசை)

ராகம் அடாணா ... தாளம் ஆதி

பல்லவி

கண்டோம் கசடர் நம்மை ஆட்டிய
கதைதனை கழித்தெரிந்திட புதுவழி (கண்)

அனுபல்லவி

அன்று ஆரியனின் ஆண்மையினாலே
ஆழ்ந்திருந்தோம் வீணிலே
அதை அழிக்க ஆக்கம்கண்ட பெரியார்
அளித்த சொற்கள் அரங்கேற்றிடவேவழி (கண்)

சரணம்

திராவிட கழகமென்றுடியே நாட்டினில்
தீவிரமாய் உரைத்தார்
தேடிடும்-உரிமையை நாடி நலம்பெற
தாடி ஈ. வெ. ரா. சொல்லை பாடி புகழுயுகம் (கண்)

(இரத்தன்—மில்கேபி சேடுகையே என்ற மெட்டு)

4. பறக்கும் பாட்டாளி மக்கள் கொடியே
பாரெங்கும் பறக்கும் பாட்டாளி மக்கள் கொடியே
சிறக்கும் சிகப்புநிறக் கண்ணேயே
வந்து-மறைக்கும் கருப்பு மேகம் தன்னையே
குறைக்கும் குணம் படைத்த கொடியே
பாரெங்கும் (பறக்கும்)

உழைக்கும் ஏழைகள் பசிப்பிணியே
ஏய்த்து-பிழைக்கும் கோழைகள் முன்னே இனியே
திகைக்கும் திராவிடநாட்டு கொடியே
பாரெங்கும் (பறக்கும்)

துடிக்கும் போராட்ட யுத்தமுனையே
எங்கும்-கொதிக்கும் பாராட்டு சத்தம் இனியே
பிரிக்கும் திராவிடமணி கொடியே
ஈ. வெ. ரா. பிடிக்கும் திராவிடமணி கொடியே (ப)

(ஆயி துவாலி என்ற இசை)

5. திராவிடநாடு திராவிடநாடு
திடுக்கிடும்போர் தீவிரத்தோடு
தீண்டாமை என்னும் தீயர்கள்முன் நீ உரைத்தாடு (தி)
மாடுமேய்க்க வந்தவர்க்கு மாளிகைபோல் மா வீடு
பாடுபட்டு உழைத்த மக்கள் பசியெனும்சொல் கூப்பாடு
பகுத்தறிவுண்டானபிற்பாடு-பஞ்சாங்கம்
பார்க்கும் பாவிகள் இல்லா புகழ்நாடு (திரா)

சூத்திரன் என்று உரைத்தால் ஆத்திரம் கொண்டே கொடு
சாத்திரத்தால் பெற்ற மக்கள் சரத்தை எங்கே கேட்டிடு
அர்த்தமில்லா ஆரியன் ஏடு
அறிவித்ததை ஆராய்ச்சியால் அகற்றிடும் நாடு    (திரா)

வேதம் ஓதும் வேதியர்க்கு வேலையில்லை என்றிடு
பேதம்செய்து வயர்பிழைக்கும் பேய்களை நீ வென்றிடு
நீதிபெற்ற நேர்வழியோடு நிறைந்த
சங்கு-நாத வெற்றி தேடிடும் நாடு    (திரா)

## (அன்மூல்கடி—மேரே பசுபன்கி சாதிமுஜே என்ற இசை)

வீணே நமக்குள் விரோதமான பேதமைதானே
வேதம் விளக்கும் வி ரீதம் மெய்தானே வேற்றுமைதானே
சாதிகள் ஏனோ சமயங்கள் ஏனோ
சாஸ்வதம்தானோ
சதிகாரமனு தர்ம மிதாமோ
நீதி இல்லா நேர்மை இதாமோ
நிலைகுலைந்தோம் நாமே    (வீணே)

ஆண்டகம்நாடு ஆரியஏடு
அளித்தது கேடு - ஆண்மையுடன்
அகற்றப்போராடு
அழைக்கும் பெரியார் உறவோடு
ஆக்கம் தேட கூடு    [வீணே]



(ஹாஜா ஹாஜா என்ற இசை)

7, தோழா, தோழா-தோழா நீ பார்ப்பனர்
ஆளும் சூழ்ச்சியை பற்றியே கெடாதே-
பாழான சூத்திரமானதோர் பட்டமே கொள்ளாதே[தோழா]

ஆட்சியின்மீதே அறிவிலா ஆரியன் சூதே
அறிவிலா ஆரியன் சூதே
சாட்சியின்றியே சாத்திரம் சொல்லும்
சாமியின் தீதே
பாழான சூத்திரமானதோர் பட்டமே கொள்ளாதே

அஞ்சாநெஞ்சம்கொள்ளு அடிமையை
அகற்றியேதள்ளு-அகற்றியேதள்ளு
நஞ்சான ஆரியனும் பரம்பதை நசுக்கியே கொல்லு
நமக்கான திராவிடநாடு பிரிவினை நாடியே நில்லு[தோழா]

திராவிடநாடு தனியெனும் பிரிவினைத்
தேடு-தனியெனும் பிரிவினைத்தேடு
போரிடப் புகழானதோர் கருஞ்சட்டையைப் போடு
அறைக்கூறிடும் தொழிலாளிமார்களின்
தொகுதியில் கூடு [தோழா]

(சந்திரலேகா— பாடாதே என்ற இசை)

8. கூடாதே (இந்தி) கூடாதே
நாம கோட்டைபோட்டு குடுமித்தலைதான் கொழுத்திடும்
கூடாதென்ற விழிப்படைந்தால்
குதர்க்கமில்லை உனக்குத்தான்

வீண் கூட்டம்போட்டு கொடுமைசெய்யும் குணங்க
ளில்லை நமக்குத்தான்
கோழைகள் நமக்களித்த கொடுமைகள் சொல்கூடாது
ஏழைகள் இழிவுதன்மை இந்தியால் விடாது
ஏற்கமறு-போர் வைராக்கியம்பெறு
ஏழ்மைசெய்யும் தாழ்மையற்ற வாழ்க்கைபண்ணுவோம்
எழில்பெறவே தமிழ்மொழியை வளர்க்க எண்ணுவோம்

எல்லா ஊரும் எதிர்க்கும் போரு
எல்லா ரோடும் எதிர்க்க நாடு

மட்டரகமாய் மதிக்கும் இந்தியை
மனதில் நீக்குவோம்
மாற்றியமைக்க மறுத்துவிட்டால் மறியல் துவக்குவோம்
மந்திஅமைப்பாம் ... இந்தி அழிப்போம்
மானமற்ற மதவெறியர்கள் மமதை போக்குவோம்

## (அயினிலே பக்கிடியாமா என்ற இசை)

அந்தோ இப்படியாமா
அந்நியர்கள் ஆட்சி இங்காமா (அ)

ஆண்மையதிலா - அடிமைவாழ்வு வாழலாமா
அந்நியர்கள் ஆட்சி இங்காமா
மொழியிலே நீயாரு - கெடா - தடு
போர் - போர் - போர் என்று கூர் - கூர் - கூர்
ஒன்று சேர் - சேர் - சேர் - சேர்.........
மதியிலா அடிமையாய் அழியுதல் அழகதா
அந்நியர்கள் ஆட்சி இங்காமா (அ)

அடக்குமுறை ஆட்சியால் நாம் அஞ்சோம்
என்று கூர் கூர் என்று கூர் அறப் போர்......
ஆடுமாடு மேய்க்கவந்த ஆரியப்பதர்களுக்கு அடிவரடி
ஆட்சிநம்மை ஆட்டி வாட்டி வீட்டி ஜெயிலில் பூட்டி
காட்டில் ஓட்டிவிட்டான் சுத்த மட்டி (அ)

(அன்மோல்கடி — ஆவாஜிதே கஹாஹ என்ற இசை)

10. மாவீர தியாகமேந்தி மறைந்தார் மகாத்மா காந்தி
மாறு அகிம்சைவாதி
மடமை தவிர்த்த ஜோதி
மறைந்தார் மகாத்மா காந்தி [மா]

நாட்டில் நாலாவித சாதி நமக்கில்லை என்பதை ஓதி
நவின்றூர் மகாத்மா காந்தி [மா]

ஈடாருமில்லாயோகி இழிவை தகர்த்த தியாகி
இறந்தார் அனுதியாகி
இனப்பேதத்தையே உண்டாக்கி
இரத்தம் குடிப்பதை நோக்கி
இசைந்தது கோட்ஸே துப்பாக்கி
இறந்தார் மகாத்மா தாக்கி [மா]

சகஜகுண ராமா என்ற இசை

ராகம் சங்கராபரணம் ... தாளம் ஆதி.

பல்லவி

11. சமதர்மமே உன்னால்தான் வந்ததே தாத்தா (சம)

அனுபல்லவி

நமது நாடு திராவிட நாடென்று சொல்லிட
நாட்டினுள்ளோர் மிக ஆக்கம் சொண்டெழுந்திட [சம]

சரணம்

சமயவேதம் இயற்றி சாதித்த வஞ்சகன்
சாதித்திமிர் அடக்க சாத்திரத்தைக் களைந்தே
உமதுவாய் சொல் எங்கள் உள்ளம் குளிர்ந்திட
உலகப்பெரியார் என்ற உண்மை உணர்ந்திட [சம]

தள்ளாத காலத்தில் தன்னலமே கருதா
அல்லும் பகலும் ஓயா அகிலமெல்லாம் சுற்றியே
கள்ளம் கபடில்லா கருத்தில் நினைத்ததை
வெல்லும் வகை உணர்ந்தே வெற்றிகொள்ளும்
தலைவர் [சம]

எண்ணி எண்ணி பார்க்க மனம் என்ற இசை



12 எண்ணி எண்ணி பார்க்காமலே ஏமாறலாச்சுது
ஏழைகள் மனம் குமுறும் எரிமலையாச்சுது !

குடியாட்சி வந்து தடியாட்சியாகி
முடியாட்சிபோல முரட்டாட்சியாச்சுது—கொடும்
மூட்டாட்சியாச்சுது!

நாமெல்லோரும் மன்னரென்று நாணயமாய்ப் பேசியே
ராமராச்சியம் நமக்கு ராமம் போடப் பாக்குது
ஏமாளியாக இருந்தது போதுமே
ஏய்ப்பவர் சுரண்டல் நீங்கவே கிளர்ச்சி செய்வோமே !



(எது வேண்டும் சொல் மனமே — என்ற இசை)

13 எது வேண்டும் சொல் தமிழா ... தமிழா! (எது)

மதிகெட்டழிந்திட வேண்டுமா ? ... அல்லது
மானத்துடன் வாழ வேண்டுமா ? ... இதில் (எது)

ஆரிய மாயையில் ஊறிய தேசியம் வேண்டுமா...அல்லது
அன்பும் அறமும் கொண்ட இன்ப திராவிடம் வேண்டுமா

மாயை வேண்டுமா ?
மானம் வேண்டுமா ? ... இதில் (எது)

விதி பேசும் வீண் வாதமா ... காணும்
விஞ்ஞான மதி போதமா ?
சதிகார மனு வேதமா ... அன்றி
சமதர்ம சமுதாயமா ?

மதபேதமா அல்லது மதி நீதமா
பேதமா ... நீதமா ... இதில் (எது)

அறியாததா அல்லது அறிவானதா
புரியாததா அல்லது புலனானதா
இதா ... அதா ... இதில் (எது)

"கோரா"

[இத்தனை நாள் என்ன செய்தாய் என்ற இசை]

14. இத்தனை நாள் என்ன செய்தாய்
விருப்பமுடன் திராவிடன்
கருப்புப்படையில் சேரா [இத்தனை]

அனுபல்லவி

எத்தனை தான் ஆயிரம் எடுத்துரைத்தும்
ஏன் மௌனம்
இக்கணமே அடைய
இசையும் தனி திராவிடம் [இத்தனை]

சரணம்

இன ஒற்றுமை அளித்த ஈரோட்டு வள்ளலுரைக்
இணக்கம் இல்லையோ தோழா
வணக்கம் இனியும் கேளாய் நம்மை
கவிழ்க்க நினைக்கும் ஆர்ய
கபடநாட்சியை கொண்டும், உண்டு களைக்கும்
காங்கிரஸின் பேச்சு மேடையளவில் கண்டும்[இ



ஸ்ரீ கேசவ விலாஸ் பிரஸ், கும்பகோணம், 1950.

குடல் கோளாறுகளான பித்தவாய்வு நோய்களுக்கும்
ஜீரண சக்திப் பெருக்கத்திற்கும்

# வில்வாதி லேகியம்

சென்ற 40-வருட ஆராய்ச்சி அனுபவத்தின்
இணையற்ற தயாரிப்பு;

## டப்பி 1-க்கு
## விலை ரூபாய் 2-8-0

இந்த லேகியத்தை மூன்று வேளை உபயோகத்திலேயே இதன் மேலான குணத்தை அறியலாம்,

**வைத்தியர், என். சதாசிவம்,**
அகஸ்தியர் ஜீவரட்சாமிர்த வைத்திய சாலை,
ரயில்வே புதுரோடு ★ கும்பகோணம்.